சொல்லும் என. வைதிகர் திடுக்கிட்டார். க்ஷணம் யோஜித்தார், உடனே மஹராஜ் 2 நிமிஷம் அவகாசம். ப்யூனே கூப்பிட்டு இந்த ராஜாவை கழுத்தை பிடித்து நெட்டித்தள்ளு என ப்யூன் தயங்கவும் ராஜா மீசை படபடக்க என்னுடைய உத்திரவை செய்யப் ப்யூன் தயங்குகிறார். இதையே தாங்கள் உத்தரவிட்டால் காரியம் சபலமாவதுபோல்தான். யார் யார் சொல்ல அல்லது, ஜபிக்க அதிகாரமோ அவர்கள் செய்தால்தான் பலனும், காயத்ரி யும் அதுபோல, பணம் குறைந்தவனாய் இருந்தால் நான் கொஞ்சம் ஒரு டிகிரி மேலே பேசுவதாக எண்ணப்படாது தர்ம சாஸ்த்ரங்கள் அப்படி யிருப்பதால் ஒருவித கிரியையும் இல்லாத சிரியாபிஜுஷ்டர்களிடத்தில் யாகத்திற்கு என வேண்டிய அளவு எடுத்து வரலாம். நாளை தர்மராஜா சபையில் விசாரணை வந்தால் நிர்பயமாக பேசலாம். சௌர்யதோஷமாக கருதப்படாது (திருட்டாக) அதோடு இல்லாமல் சபாஷ் என்று தட்டிக்கொடுப்பார்கள். இது கலி விபரீதமாகிவிடும். மேலே கவனிப்போம்.

यज्ञशोलानां धनं न हार्यं அப்படியேதான் देवस्व मेव च அக்னி ஹோத்ராதி யாகங்கள் பண்ணுகிறவர்களுடையவும் கோயில்கள் சொத்திலும் ராஜாக்கள் கிட்ட நெருங்கமாட்டார்கள். அது பொசுக்கிவிடும். திருடர்கள் ஒருவித கர்மாவும் செய்யாதவர்கள் இவர்களிடத்தில் அதிகாரத்தை செலுத்தி வந்தார்கள். दस्यूनां निष्क्रियाणां च क्षत्रियोहर्तुमर्हति தார்மிகனை ராஜாவானவன் தன் தேசத்தில் அத்யயநம் செய்யாதவர்கள் அக்னிஹோத்ரம் செய்யாதவர்கள் இவர்களை ராஜாங்கத்தில் சம்பளமில்லாமல் வேலை செய்யவும் அல்லது வரிகளை ஜாஸ்தியாக போடவும் செய்தல் வேண்டும்.

अश्रोत्रियाः सर्व एते सर्वे च अनाहिताग्नयः ।
तान् सर्वान् धार्मिको राजा बलिं विष्टिंच कारयेत् ॥

பலிம், கரதாநம்; விஷ்டிம், வேதநம்விநா ராஜஸேவாம். அடியேன் சொல்லவில்லை, பாருங்கள் லோகத்தின் க்ஷேம லாபங்கள் இவன் கையில் ஒப்படைக்கப்பட்டு இருக்கிறது. இவ்வளவையும் விட்டு விட்டு எங்கேயோ பல ஆயிரம் மைல் களுக்கு அப்பால் உள்ள விஷயத்தை தெரிந்துகொள்வதில்

---

கள் கொஞ்சம் ஒத்துக்கொள்வார்கள். ஹோமம் செய்யாமல் உண்பது பாபத்தையே உண்பதுபோல்தான், ஹோமத்தின் மேன்மை பற்றி வஸிஷ்டரும்त्रिवित्तपूर्णां पृथिवीं योददाति स सागरां । तस्यायं अग्निहोत्रस्य कलां नार्हति षोडशीं ॥

ஸ்ரீ:

# யாகத்தின் தனி சிறப்பு இதழ்

एता असदन्त्सुकृतस्य लोके ता विष्णो पाहि
पाहियज्ञं पाहियज्ञपतिं पाहि मां यज्ञनियम् ।

எங்கும் முகமலர்ச்சி உத்க்ரோதம் குர்வதே ஆரவாரம் சந்தோஷம் மேலிட்ட கலஹம். புரோடாசம் உத்தேசித்தும் மற்றும் நெல் வண்டியில் இருந்து கார்ஹபத்யம் மேல்புறம் இறங்குகிறது. அப்பா வெடி வாங்கிண்டு வந்துட்டா எல்லாம் எனக்குத்தான் என்ற குழந்தைகள் ரீதியிலேயே தேவதைகளும் ஹவிஷ் க்ருதேஹி, ஹவிஷ்க்ருதேஹி, ஹவிஷ்க்ருதேஹி. அத்வர்யு முறத்தின்மேல் அக்நிஹோத்ரஹவணி மூலம் இந்த்ராய ஜுஷ்டம் நிர்வபாமி. ஸோமாய ஜுஷ்டம். அக்நிஷோமாப்யாம். சப்தம் அடங்கி விடுகிறது. இன்ன தேவதைக்கு என பிரித்து வைத்தல் நிர்வாபம் என்பது. யஞ்யத்தில் தம் தம் பாகங்களைப் பெற தேவதைகள் படுகிறபாடு. இப்படி இருக்க பூர்வமீமாம்ஸா சாஸ்த்ரகாரர்கள் சிலர் மதம் தேவதைகளுக்கு உடம்புகள் இல்லை. இந்த்ராய ஸோமாய அக்நயே என்ற நாலாம் வேற்றுமையோடு கூடின சொற்களே. வேறு சிலர் பகலை தேவதைகளாயும் இருட்டை அசுரர்களாயும் இரண்டினுடைய சேர்க்கையை தேவாசுர யுத்தமாயும் வேறு சிலர் ஒரே போடாக கடவுள் இல்லை. இல்லவே இல்லை. அது போகட்டும் மேலே கவனிப்போம். யஞ்ய சத்ருக்கள் வெகுண்டார்கள். அடி பிடி கொளுத்துங்கள். சுருக்சுருவம் யஞ்ய பாத்திரங்களை எறியுங்கள். யஷ்டா அத்வர்யு இவர்கள்தாம் மூலகாரணம். வேண்டாம் யஷ்டா சுத்த ஏகாதசி கண்கள் பஞ்சடைந்தவன். அத்வர்யு புஷ்டியான அங்கம். இந்த 18 பேர்களையும் ஆட்டி வைப்பவன் மேலும் கர்வி தேவதைகளை அழை என்று நம் ஆணையின்பேரில் தானே (ருக் வேதிகள்) வந்த தேவதைகளை ஸ்தோத்ரம் உம் (ஸாம வேதிகள்) ஆகையால் யஜுர் வேதமே அங்கி. மற்றதுகள் அங்கம் என எண்ணமுள்ளவன். பம்பரம்போல் சுழல்கிறான் ராக்ஷஸர்களான நாம் எலி ரூபத்தில் வந்து நெய் வாசனைக்காக கரண்டி விடுவோம் என மேதாவியான அத்வர்யு வெந்நீரையும் சீயக்காய் தூளையும் கலக்கி அப்பி வைத்திருக்கிறான். ஸாக்ஷாத் சத்ரு இவனே. அந்த இடத்திலேயும் ந து ராக்ஷஸ சேஷ்டித: என்ற ஸாது. ஹே பிரபோ! கோபத்துக்கு வசப்பட்டு இருக்கிறீர்கள். சமதமாதி குணங்கள்தான் எல்லோரையும் விளங்க செய்கின்றன. இந்த பத்து பேர்களும் தர்மத்தை புறக்கணிப்பவர்கள்.

मत्तः प्रमत्तः उन्मत्तः श्रान्तः क्रुद्धो बुभुक्षितः
त्वरमाणश्च लुब्धश्च भीरुः कामीच ते दश ।

நாம் ஸ்வாதந்த்ரியம் அற்றவர்கள். திட்டங்கள் நிறைவேற கவனியுங்கள். புருஷனுடைய கிரியாபலமானது பராதீனமாக இல்லாவிடில் அவர் அவர்கள் விரும்பியபடி காமங்களை அடைவார்கள்.

योयं इच्छेद्यं यज्ञा कामं स तं कामं समाप्नुयात् ।
यदिस्यान्न पराधीनं पुरुषस्य क्रियाफलम् ॥

''புரியவில்லையா मानुषं तु क्रियामात्रं दैवात् संभवते फलम् பயிர்களை நடலாம், தண்ணீரை கட்டலாம், களை பிடுங்கலாம், அதற்கு கதிர் பிடிக்கும்படி செய்வது ஸர்வேச்வரனுடையது. இதைத் தான் பராதீனம் என்றேன். அவர்களோ நாராயணனையே பரகதியாக உடையவர்கள். குழந்தாய்! உனக்கு ஒன்றுமே தெரியாது. சமம் தமம் என்ற மஹரிஷிகளே அக்நிஹோத்ரத்தில் தமக்கு பாகம் ஏற்பட வேண்டி பசுக்கள் மேயும் புல்கள்மீது மிக லேசாக விஷப்பொடிகளை இது ஸாஹஸமல்லவா. அங்கி ரஸோாவை, ஸத்ரமாஸத என்ற அனுவாகத்தைக் கவனி. ஸ்வாமின் அது வேறு விஷயம். நமக்குத்தான் பாகம் எதேஷ்ட மாகவும், அசைக்க முடியாத சாக்ஷிகளும் தேசத்தில் உள்ள அரண்மனையில் உள்ள ஸாரமான வஸ்துக்களை எல்லாம் திரட்டி என் குழந்தைகள் 14 வருஷம் கஷ்டப்படாமல் இருக்கவேண்டி பர்வணீவ ஆஹிதாக்நிநா. தீக்ஷிதர்கள் ஸாரமான அரிசியை எடுத்துக்கொண்டு உமி, தவிடு, நொய் நொறுக்கு ரக்ஷஸாம் பாகதேயம் என இந்த கைகேயி ஒரு ஸாக்ஷியே போதும். தர்ம சாஸ்த்ரகாரர்களும்

क्षुतं कीटावपन्नंच यच्चोच्छिष्टाचितं भवेत् ॥
सक्लेशमवदूतञ्च रुदितोपहतंच यत्
श्वभिः संसृष्टमन्नंच भागोसौ रक्षसामिहं

தும்பினது எச்சல் தெரித்தது, புழு ஸம்பந்தம், மயிர், நிந்திக்கப்பட்டது கண்ணீரால் கெடுக்கப்பட்டது நாயால் பார்த்தது. (தொடப்பட்டது) இவ்விதமான அன்னமும், ஸ்வாமி தேசிகனும் பின்வாங்கவில்லை. கறுகினது காந்தல் யாதயாமம் நூல் நூற்றது இன்னும், பெரும்பாலும் யார் ஆச்ரம தர்மத்தோடு கர்மாக்களை அடேயப்பா குட்ஸில் ஏற்றலாம் நம் பாகத்தை. அசுர ராக்ஷஸர்களை கூப்பிடட்டுமா என்றால் அழுகிற குழந்தை கூட வாயை மூடிவிடும். (பிருகுபத்நி புலோமா, ராக்ஷஸ னும்புலோமா என்பவன்) உலகிலும் ஸகலரும் தூற்றும்படி ஜன்மாவும் நமக்கும் அத்யயநம் அக்நிஹோத்ராதிகள் உண்டு. அந்த ரீதியில் மேன்மை அடையவேண்டி இருக்க, இதோ அத்வர்யு கதறுகிறான், கவனியுங்கள். एताअसदन्......यज्ञनियम्

ஹே விஷ்ணோ! இந்த ஸ்ருக், ஸ்ருவர்திகளோ உலக நலனுக்கே ஏற்பட்டவைகள். அவைகளையும் எக்னுத்தையும் யஷ்டாவையும் அத்வர்யுவான அடியேனையும் காப்பாற்றுங்கள். நிஷ்காரணமாக, பிறரை ஹிம்ஸிக்க, அவர்கள் கண்ணீரை சிந்தினால் அது தீயாக ஆகி ஹிம்ஸை செய்தவனையோ அல்லது புத்ரன், பௌத்ரன், கொள்ளுப்பேரன் தலையில் கண்டிப்பாக

यदि नात्मनि पुत्रेषु नचेत् पौत्रेषु नप्तृषु ॥

ஹநுமான் ஸீதாபிராட்டியின் சோகத்தால் ஏற்பட்ட கண்ணீ ராகிய தீயை கொண்டேதான் லங்காதஹநம். நாமும் துர் குணங்களை விட்டு வேதம் வகுத்த பாதையிலேயே கர்மாக்களை செய்ய திரண்டு வாரீர்! சுபம்.

அக்கரையும் (ஸம்ஹிதை காண்டம் 2 பி 3. பஞ். 3 அவன் வீட்டு குதிரில் நெல் அபரிமிதமாக இருக்கிறது. ஆகையால் விருதாஜல்பம்) ஸ்வதர்மம் என்பது விடியற்காலம் எழுந்தது முதற்கொண்டு இரவு படுக்கும் வரை எந்த காலங்களில் எது அனுஷ்டிக்கணும் என்பதுதான். நம் ஆசார்யன் விதித்தது. இதெல்லாம் பார்த்தால் தர்மங்களை தெரிந்து கொள்ளாமல் இருப்பதுதான் மருந்து என்று சிலர் பேசுவர். அதுவும் தப்பு अविद्यः पुरुषः शोच्यः। शोच्यं मैथुनं अप्रजं ॥ வித்தையில்லாத புருஷன் துக்கிக்கத் தகுந்தவன் ज्ञानस्य लाभं परमं वदन्ति ॥ உத்தமமான லாபம் ஞானமே. நேத்ரம் இல்லாதவன் எப்படி மார்க்கத்தில் சிரமப்படுவனோ அதேபோல்தான் உலகில் ஞானமில்லாதவனும்

नेत्र हीनो यथाह्येकः कृच्छ्राणि लभतेऽध्वनि ।
ज्ञानहीनः तथा लोके तस्मात् ज्ञानविदोऽधिकाः ॥

ஆகையால்தான் தர்மம் தெரிந்தவன் மேம்பட்டவன். தர்மங்களை தெரிந்தே ஆகவேண்டும். ஏனெனில் நாம் அனுஷ்டிக்க முடியாவிடினும் இவ்வளவு பர்யந்தம் இருக்கே என்று நினைத்து தாபப்பட ஹேது உண்டு. பெரும்பாலும் வெளியிட்டுச் சொல்வதினாலேயும் அனுதாபப்படுவதினாலேயும் ஓரளவு பாபமானது குறைகிறது.

ख्यापनेन अनुतापेन प्रायः पापं विनश्यति ।
तस्मात् संकीर्तयेत् पापं नित्यं धर्मं च गूहयेत् ॥

தர்மத்தை மறை, பாபத்தைச் சொல்லு. சொன்னால் போச்சு என்பார்கள். காலம் சரியில்லை என்றால் நம்மை நாமே ஏமாற்றிக்கொண்டதுபோல்தான். கூட்டைக் கட்டும் பூச்சி யானது நித்யம் நூல்களால் தன்னையும் சேர்த்து கட்டிக் கொள்வதுபோல் இருக்கக்கூடாது பகவான் மிக்க கருணை கொண்டு நமக்கு நல்ல ரீதியில் கரணகளேபரங்களை கொடுத்தும் புத்தியும் சக்தியும் ப்ரயோகத்தையும் (முன்பு ப்ரயோகம் இல்லை தற்பொழுது அந்த கஷ்டத்தை ஸ்வாமி நீக்கிவிட்டார்) பண்ணி வைக்க திருக்குடந்தை தாத்தாச்சார் ஸவாமியையும் கொடுத்தும்

---

பணத்தால் நிறைந்ததும் சமுத்ரங்களுடன் கூடியதுமாகிய இப்பூமியை மூன்று தடவை தானம் செய்தவனின் புண்யம் 1 வேளை மாலை அக்நி ஹோத்ரத்தின் 16 ல் 1 பங்குக்குகூட சமமாவது இல்லை. (அங்கிரஸ்கள்) பூ: புவ: ஸுவ: என்ற வ்யாகிருதிகள் ஸ்வதா ஸ்வாஹா நம: வஷட் என்ற இந்த சப்தங்கள் எவன் வீட்டில் எப்பொழுதும் உச்சரிக்கப்படுகின்றதோ அவன் பிரும்மலோகத்தில் இருப்பவனே

வெறுமனே இருந்தால் யார்மேல் தப்பு. (அந்த ஸ்வாமியிடம் அடியேனுக்கு பக்தி அதிகம் அதனால் சொன்ன விஷயம்) ஏன் ச்ரௌத பிரயோகம் தெரிந்தவர்கள் வேறு யாராவது இருந்தால் நடத்தட்டும் மிகச் சந்தோஷம்தான். நம் கண்ணை நாமே குத்திக்கொண்டதுபோல் இருக்கக்கூடாது. यथा कर्कटकी गर्भं आधत्ते मृत्युमात्मनः ஏன் நண்டு கர்ப்பம் தரிக்கிறது என்றால் மாண்டுபோவதற்குத்தான். வயிற்றைப் பிளந்துகொண்டுதான் குஞ்சுகள் வெளிவரும். कर्कस्य ना शहेतुः गर्भ एवेति प्रसिद्ध इது பிரஸித்தமானது. ஆக நாம் நித்யகர்மாவை செய்தே தீர வேண்டும். விடக்கூடாது.

तदिदं वेदवचनं कुरुकर्म त्यजेतिय । कर्म कुरु मा दिवा स्वसीः ॥

கர்மாவை செய்யவும் வேணும், பல த்யாகமும் செய்யவேணும். மேலும் कृपणाः फलहेतवः என்று பலத்தில் ஆசைப்படுகின்றவன் அற்பன். दमत्यागोऽप्रमादश्च एतेषु अमृतं आहितं சமதமாதி குணங்கள், கர்மபல த்யாகம், தவறுதல் இல்லாமை, இதுகளில் மோக்ஷமானது வைக்கப்பட்டு இருக்கிறது. இந்த கர்மாவானது பயனில் விருப்பம் முதலிய கல்மஷமில்லாத (இதை கல்மஷம் என்றே பேசுவதை கவனிக்க) இந்த கேவல தவமானது (ஆசை யில்லாத) வளர்வதாயினும் மிக அதிகம் வளர்வதாக ஆகிறது. முந்திய ஸஹோதரர்கள் இருவர் கேட்டதென்ன, நடந்ததோ விபரீதமே விபீஷணஸ்வாமியோ பகவத்பிரீதியேதான் நமக்கு பிரயோஜனம், ஸர்வேச்வரன் தன்னையே கொடுத்துவிட்டான். (ஸ்ரீ ரங்கனுதனை) எதுவும் பகவத் பிரீத்யர்தமாக பண்ணினால் தான் கர்மாவும் வீர்யவத்தாக ஆகும்.

निष्कल्मषं तपस्त्वेतत् केवलं परिचक्षते ।
एतत् समृद्धं अपि ऋद्धं तपोभवति केवलम् ॥

வேத வித்துக்கள் தவத்தால் அமிருதமயமான பரமாத்மாவை அடைகிறார்கள். எவன் அக்நி கார்யம் இல்லாமலும் வேதத்தை

आद्याः व्याहृतयः तिस्रः स्वधास्वाहा नमोवषट् ।
यस्यै ते वेश्मनि सदा ब्रह्मलोकस्य एवसः ॥

எல்லாம் ஸாத்யம்தான். ஆனால் மிக கவனிக்க வேண்டியது

सोपथं निकृतिस्तेयं परिवादोह्यसूयिता ।
परोपघातो हिंसाच पैशुन्यं अनृतं तथा ।
एतानि सेवते यस्तु तपस्तस्य मितायते ॥

அத்யயநம் செய்யாமலும் கண்டவிடத்தில் உண்பவனும் ப்ரதிக்ரகத்திலேயே நோக்கு உள்ளவனும் இருப்பவனே ப்ரும்ம தூஷகன் என்கிறார்கள். இது இளப்பம் அல்லவா? ஸ்ரீமத் ராமாயணத்திலும் ஜடாயுவின் ப்ரகரணத்தில் ஸ்ரீராமன் வாக்கால் ஆஹிதாக்நிகளுக்கு எந்த திரும்பி வராததான லோகம் உண்டோ அந்த லோகத்தை நீ என்னுடைய ஆஞ்யையால் அடை, என்று நிஸ்ஸந்தேஹமாக, புநரா விருத்தி இல்லை என்பது தெளிவா கிறது. மேலும், आहिताग्नियति ऊर्ध्वं सपत्नीकं सव्रान् धवं என்றும் நம்மாத்துக் குழந்தைகள்கூட ஹோமசமயத்தில் ஏதாவது ஒரு சமித்தோ, உமி, வறளி, அல்லது புஷ்பங்களையோ சமயத்தில் கொடுத்தால் அது அக்நிஹோத்ரத்திற்கு சிச்ருஷை பண்ணினது போல் ஆகிறது, மேலும் உத்தமகதிக்கும்கொண்டு சேர்த்து விடும்.

यथोक्तं अग्निहोत्राणां शुश्रूषन्तिचयेद्विजाः ।

तैः दत्तं सुहुतं चेष्टं दत्तं अध्यापितं भवेत् ॥

இப்படி உதவியது பற்றி மேன்மேலும் அத்யயநம் பண்ணினது போலும் கொடுபட வேண்டியது கொடுத்தாற்போலவும் யக்ஞம் பண்ணினதுபோலவும் ஆகிறது. சமீபத்தில் ஒரு யதிகள் சொல்லியதாவது 'திருவிண்ணகரப்பனே ஆராதியும், போதும்" என சாதித்தார். அவாள் வேறு ஆச்ரமத்துக்கு ஏள்ளியாய் விட்டது. (ஸந்யாஸம்) நாமும் ரிணத்ரயத்திலிருந்து விடுபட இதோ அதோ என்று சாக்குப்போக்குச் சொல்லி பிறகு 5 நயா பைசாதான் சிலவு காவிக்கட்டிக்கு. வேறு ஆச்ரமத்திற்கு போய்விட்டால் நம்மை கடன்காரர்கள் என்ன செய்யமுடியும், கிட்ட நெருங்குவார்களா? க்ருஹஸ்தாச்ரமத்தில் இருந்துகொண்டு யக்ஞம் பண்ணமல் இருப்பது மஹாபாபம். ச்வேது கேது உபாக் யாநத்தில் தம்பதிகள் பேசிக்கொண்டதை கவனிக்குமிடத்து

अहमित्येव भावेन स्थितोहं त्वं तथैव च ।

तस्मात् कर्माणि कुर्वीथाः................ ॥

நமது வீடு, நமது குழந்தைகள், நமது சொத்து, நம்மால் போஷிக்கப்படத்தக்கவர்கள் என்ற அபிமானம் உள்ளவரை யக்ஞம் பண்ணியே ஆகணும். ஸந்ததி உண்டாக்குவதால்

---

வஞ்சகம் அவமானம் திருட்டு தூஷித்தல் அஸூயை பிறருக்கு இடையூறு, ஹிம்சை, கோட்சொல்லுதல், பொய் இவைகளை எவன் செய்கிறானோ அவனுடைய தபஸ் குறைவை அடையும். இவைகளைச் செய்யாதவனுக்கு तपस्तस्य प्रवर्धते விருத்தி அடையும். தவறுதல்கள் ஏற்படுவது விசேஷமாக ஸங்க தோஷத்தால்தான். (நல்ல சேர்க்கை இல்லாததால்) கர்ம காலம் தவிர பாக்கி காலங்களில் பகவத்யானத்

பிதிருக்களுடைய கடனும் வேதத்தை அத்யயநம் செய்வதால் ரிஷிகளுடைய கடனும் யக்ஞம் பண்ணுவதால் தேவதைகளுடைய கடனும் நிவிருத்தி ஆகின்றன. காண்டம் 6. பி. 3. பஞ். 55. பிராம்மணன் பிறக்கும்போதே இந்த மூன்றுவித கடன்களுடன்தான் பிறக்கிறான். இதுவரை மேலே சொல்லப்பட்டது யாவும் இஷ்டம் என்பது. பூர்த்தம் என்பது ஸாமான்யம் கிணறு வெட்டல், குளம், தண்ணீர் பந்தல் அமைத்தல், தேவாலயம் செப்பனிடுதல், நந்தவனம், புஷ்பம் தொடுத்து சாத்தல் ஸாதுக்களை பூஜித்தல் இவை போன்றவை, இவைகளுக்கு பலன் என்னவென்றால் இந்த்ரலோகம் சந்திரலோகம் என்றவை நரகங்கள்தான். இவைகளை நரகம் என்று சொல்லலாமோ எனில், அடியேன் சொல்லவில்லை. ஸ்வாமி தேசிகன் அநேக இடங்களில் ப்ரமாணமாக சாதித்ததைத்தான் சொல்கிறேன்.

> रुद्रादित्य वसूनाञ्च तथान्येषां दिवौकसाम् ।
> एते वैनिरयस्ततात स्थानस्य परमात्मनः ॥

நரகம்தான் சந்தேஹமென்ன, துக்கம் கலந்தது தானே. இந்த லோகங்களுக்கும் ஸாக்ஷாத் ஸ்ரீ வைகுண்டத்திற்கும் வாசியை உற்றுநோக்கும்போது அந்த யதிகள் நம் ஸூத்ரத்தை பார்த்திருக்க மாட்டார். ஆகையால் அப்படி சாதித்தார் பாவம். வேதாத்யயநம் ஒரு ஸம்ஸ்காரமல்லவா. ப்ராஜாபத்யவ்ரதம், ஸௌம்யவ்ரதம் என்று ஒவ்வொரு வ்ரதங்களுக்கும் நமது கிருஹ்ய சூத்ரத்தில் காண்டங்களை குறிப்பிட்டு சொல்லவில்லையா. மேலும் ஸூத்ரக்காரர் பிராம்மணன் என்றால் யார்? ச்ரோத்திரியன் என்றால் என்ன? அனூசானன், ப்ருணன், ரிஷிகல்பன், முனி என்றும் ஸம்ஸ்கார விசேஷத்தால் முன் சொன்னதைவிட பின்னால் சொல்லப்பட்டது யாவும் விசேஷம்.

> इति संस्कार विशेषात्तु पूर्वात् पूर्वात् परोवरीयान् इति विज्ञायते ।

என்று முதல் கண்டத்திலேயே முகப்பிலேயே விளக்கியுள்ளார். துவிஜாதிகளுக்கு வேதத்தில் சொல்லப்பட்டவைகளும் புண்யமான கர்மங்களால் நிஷேகம் முதலான சரீர ஸம்ஸ்காரங்களை செய்ய வேண்டும். இது இவ்வுலகிலும் இறந்த பின்னும்

தோடு ஏகாந்தமாக இருக்கப் பழக்கிகொண்டு விட்டால் ஜாஸ்தியான பாபம் ஏற்படாது. ஒரு பிராம்மணி அதிதிஸத்காரம் செய்ய நேர்ந்த போது அவள்மூலம் தனக்கு ஏற்பட்ட அனுபவத்தை அவதூதர்

> बहूनां कलहो नित्यं द्वयोः संकथनं ध्रुवम् ।
> एकाकी विचरिष्यामि कुमारी शङ्ख कोयथा ॥

பரிசுத்திகரமானது. கர்பஹோமங்கள் ஜாதகர்ம நாமகரணம் சௌளம் உபநயநம் வேதாத்யயநம் அதற்கு உரிய வ்ரதங்கள் விவாஹம் மஹாயக்யங்கள் யாகங்கள் இவைகளால் சரீரமானது பிரும்ம மயமாக செய்யப்படுகின்றது.

गर्भैर्होमैः जातकर्म नामचौलोपनायनैः ।
स्वाध्यायैः तत् व्रतैश्चैव विवाहस्नातकव्रतैः ।
महायज्ञैश्च यज्ञैश्च ब्राह्मीयं क्रियते तनुः ॥

எல்லோருக்கும் விவாஹ பர்யந்தம் 18 ஸம்ஸ்காரங்கள் ஆகிவிடுகிறது. अष्टादशसंस्काराः शरीराः என்பது நமது ஸூத்ரம். பாக்கியான 22ல் பிரும்ம யக்ஞம் ஒன்று. இந்த பிரும்ம யக்ஞமானது தினம்தோறும் செய்யவேண்டியது. ஒரு டம்ளர் தீர்த்தம்தான் செலவு 5 நிமிஷத்தில் முடிந்துவிடும். இந்த யக்ஞத்திற்கு யூபம் கிடையாது. பசு கிடையாது அவபிருதமும் இல்லை, நாள் கணக்கும் இல்லை உடனேயே ஆரம்பித்து உடனேயே முடிந்து விடுகிறது. இதற்கு மஹாயக்ஞம் என்று பெயர், அவ்வளவு பெருமை. வேதமும் இதுபற்றி அருணம், பி. 2 இந்த பிரும்ம யக்ஞத்தை ஜாஸ்தியான ஜோலியோ, தேஹ ச்ரமமோ இருந்தபோதிலும், நின்றுகொண்டோ, படுத்துக் கொண்டோ, அல்லது எக்ஸ்பிரஸ் வேகத்தில் ஓடிக்கொண்டோ அப்யஸிக்கவேண்டியது என்று சொன்னது வலியுறுத்திச் சொன்ன விஷயம். அதாவது விடப்படாது.

उत्तमं नाकं रोहति । उत्तमः समानानां भवति

மேலே சொல்லப்பட்டது ஸாமம் இன்ன பலன் என்று தான் சொன்னால்தான் செய்வார்கள் என்று உபதேசிக்கிறது வேதம். உத்தம லோகம் கிடைக்கும், சமானவர்களுள் உத்தமனுக ஆவான் என்றும், சிறிது கடுமையாக,

तं योनूत्सृजति, अभागो, वाचि, भवत्यभागो, नाके

அவனுக்கு வாக்கில் (இதை அனுஷ்டியாதவர்களுக்கு பலன்) பலன் உண்டாகாது. அப்படியேதான் ஸ்வர்க்கத்திலும் பலன், ஸைபர்தான், மிகப் பெரியோர்கள் முன்பு நியத, ப்ரச்னி என்று தன்னுடைய வேதத்தில் தினம் 31 பிரச்னம் சொல்லித்தான் மேற்கொண்டு காரியங்களை கவனிப்பார்கள். முடியாதவர்கள் 3 அனுவாகமாவது சொல்லி விருஷ்டிரஸி சொல்லி முடிப்பதும்

பல வளையங்கள் தரித்துக்கொண்டு இருந்த பெண்மணி அதிதிக்குத் தெரியாமல் இருக்கவேண்டி நெல்லை குத்தும்போது சப்தம் ஜாஸ்தியாக உண்டானபடியால் ஒவ்வொரு வளையங்களாக உடைத்து மிஞ்சியது ஒவ்வொன்று ஆனபடியால் சப்தத்திற்கே ப்ரஸக்தி இல்லை. பல

ஆக 19 போக பாக்கி 21. இதில் பாகயக்ஞம் 7 ஹவிர்யக்ஞம் 7 ஸோமயக்ஞம் 7, பாகயக்ஞம் என்பது ஸ்மார்த்தகர்மா. ஒரு அக்னியை வைத்துக்கொண்டே செய்யவேண்டியது. பாக்கி 14ம் ச்ரௌதம், அதாவது 3 அக்னிகளை உபாஸிக்க வேண்டியது (த்ரேதாக்னி உபாஸநம்) இது ஜீவனை சேர்ந்தது. இந்த ஜீவனில் மாசு நிறைய படிந்து இருக்கிறது உதாரணமாக துருப்பிடித்த இரும்பு துண்டமானது காந்த கல்லிடம் எப்படி செல்லாதோ அதுவே சுத்தமானதாய் இருந்தால் குபீரென பாய்ந்து ஓடி ஒட்டிக்கொள்ளும். இதைத்தான் அடிக்கடி ஸம்ஸ்காரங்கள், ஸம்ஸ்காரங்கள் என சொல்லி வருகிறோம் இவ்வளவும் நமக்கு மஹா கருணையுடன் ஆசார்யன் விதித்துள்ளார், ஆக நாம் நம் சொந்த ஊருக்கு போய்தானே ஆகவேண்டும். (ஸ்ரீ வைகுண்டத்திற்கு) இந்த லோகமானது தீர்க்கமான வழியை அடைந்தவன் எப்படி அங்கு அங்கு தங்குவதற்கு கொஞ்சம் சௌகர்யங்களை செய்து கொள்கிறானோ (அதாவது இளைப்பாற) அப்படியேதான், நமது வீடு வாசல்களும். வேதங்களோ இதை செய்தால் இன்ன பலன் கிடைக்கும் என்று தேன்போல சொல்கிறதே என்றால், வேதமானது மனமாற சாச்வதமாய் குழந்தை குட்டிகளோடு இங்கேயே இருப்பதற்கு வழியை வகுக்கவில்லை, ருசிக்கும்படி சொன்னால்தான் கர்மாக்களை செய்வார்கள். இன்னும் உயர்வான கர்மா, எது என்று கவனிப்பான். நாளடைவில் இதெல்லாம் நச்வரம் (ஸ்திரமில்லாதது) என்றும் புத்தி உண்டாகி பகவத் ப்ரீதியேதான் நமக்கு ப்ரயோஜனம் என்ற முடிவிற்கு வருவான்.

यथा तु पुरुषो राजन् दीर्घमध्वानमाश्रितः ।
क्वचित् क्वचित् श्रमस्थानं कुरुते वासमेव वा ॥

இதெல்லாம் கொஞ்சம் சிரமத்தை அடைந்தவனுக்குத்தான் தர்மத்தைப் பற்றி பரிசீலனை பண்ணத் தோன்றும். ஸ்வஸ்தனாக இருப்பவன் ஸ்வர்க்க வாயில் அடைபட்டதாகவே எண்ணுவான் (பார்க்கிறான்). அப்படி இருக்கக்கூடாது என்பதற்காகவே தான், ஒரு அங்கத்திலேயும் தாபமில்லாமல் இருப்பவன் ஸர்வேச்வரனுடைய அனுக்கிரகத்தாலேதான் இவ்வளவு க்ஷேமங்களும். மேலும் ச்ரேயஸ்கரமானது எது என்று பெரியோர்களை அடுக்கணும்.

---

பேர்கள் சேர்ந்தால் கலஹம். இரண்டே பேர் இருந்தால் பேச்சு நிச்சயம் வரும். ஒண்டியாக சஞ்சரித்தால்? ஏகாந்தவாஸம் விசேஷம். எவ்வளவுக்கெவ்வளவு வியாபாரங்களை குறைத்துக் கொள்கிறோமோ அந்த அளவு க்ஷேமமே. விரிவாய் உள்ளது சிரமம்

यथाविमृशते जन्तुः कृच्छ्रस्थो धर्मदर्शनम् ।
पदस्थः पिहितद्वारं परलोकस्य पश्यति ॥

சிரமத்தை அடைந்தவன் யாரைப் பார்த்தாலும் மஹான்களாக எண்ணுவான்; நமஸ்கரிப்பான்; தர்மங்களை அலசிக் கவனிப்பான். பெரியோர்களை அடுப்பது தர்மத்திற்கு ஹேதுவாகும். अहन्यहनि धर्मस्य योनिः साधु षमागमः பாபிகளை அடுப்பதால் ஒரு தேஹம் விட்டு பல ஆயிரம் தேஹங்களை அடைவதற்கு ஹேதுவாகும்.

अबुद्धं अनुवर्तनात् देहात् देहसहस्राणि तथा समभिपद्यते ।

ஆக நாம் ஸ்வதர்மத்தை அனுஷ்டித்துத்தான் ஆகவேண்டும். இந்திரியங்கள் நம் வசம் இருக்கும்போதே காரியங்களை சாதித்துக் கொள்ளல் வேண்டும். இந்திரியங்கள் வசம் நாம் ஆகிவிட்டால் பிற்பட்டு என்ன செய்யமுடியும். ब्रह्मादिस्थावरान्तश्च संसारो यः प्रकीर्तितः பிரும்மா முதல் ஸ்தாவரம் பர்யந்தம் எல்லாம் ஸம்ஸாரங்கள்தான். இதிலேயே சுழன்றுகொண்டு இருப்பதா. யோஜித்துப் பார்க்கவேண்டும். காலம் சரியில்லை என்று எல்லாம் பிற்பட்டு பார்த்துக்கொள்வோம் என இருக்கக் கூடாது. ஜீவியகாலம் எவ்வளவு என்று யாருக்குத் தெரியும். அல்லது புத்திதான் மாறிவிட்டால் என்ன செய்யமுடியும். ஒரு காலத்தில் இந்த பாபி நாசத்தை அடையமாட்டானு என்பவனையே சிறிதுகாலம் சென்றவுடன் அவன் க்ஷேமத்தோடு சேரவேண்டும் என்று நினைப்பது ப்ரத்யக்ஷம். மனமானது சலனமுள்ளது.

यस्यैव हि मनुष्यस्य नरो मरणमिच्छति ।
तस्य पर्यागते काले पुनर्जीवितुमिच्छति ॥

காலம் சரியில்லை என்று ஸந்தியாவந்தனம் செய்யாமல் இருக்கிறோமா, எங்கேயோ மறைந்து கொண்டாவது செய்ய வில்லையா; அதேபோல்தான் இதர கர்மாக்களும்.

ஆக ஸகலமும் த்யாகத்தில் முடிவு பெறும். இந்த ஜன்மாவானது மிருத்யுவினுலேயும் ஜரையினுலேயும் துக்கங்கள் வியாதிகள் மனத்தின் க்லேசங்கள் இவைகளால் சூழப்பட்டு இருப்பதைக் கவனித்து (எல்லாம் ஸ்திரமில்லாதது) மோக்ஷத்திற்கு முயலுபவனே புத்திமான்.

ஜனதேவன் என்னும் ஜனகமஹாராஜன் மனத்தில் நன்றாக விசாரித்து கர்மங்களை தியானம் பண்ணிக்கொண்டு ஸர்வ பாவனை பெற்று அந்த எண்ணத்துடன் ஸஞ்சரித்துகொண்டு இருந்தான். ஆத்மாவை நன்றாக அறிந்தவனும் அறிவு உள்ளவர்களில் சிறந்தவனு

ईशन्नापि महायोगी सर्वस्य जगतो हरिः ।
कर्माण्यारभते कर्तुं कीनाश इव दुर्बलः ॥

ஸகல லோகத்திற்கும் ஈசனுய் இருக்கும் ஹரியும் துர்பலனுன உழவன்போலவே காரியங்களை செய்யவே யத்தனிக்கிருர். ஒரு சமயம் ஞானநிதியான நாரதருக்கும் 16000 ஸ்திரிகளோடு எப்படி கிருஹஸ்த தர்மத்தை அனுஷ்டிக்கிருர் என கண்ணன் விஷயமாக தடுமாற்றம் ஏற்பட்டது. ஸ்ரீ கிருஷ்ணன் ஒரு வீட்டில் அக்னி ஹோத்ரம் செய்கிருர். மற்றும் ஒரு கிருஹத்தில் ஆராதனம் நடக்கிறது. ஒரு இடத்தில் அதிதியை வரவேற்று உபசாரம். ஒரு வீட்டில் சம்பந்திகளோடு சீர்வகை போதாது என சச்சரவு. யானை ஏற்றம், குதிரை ஏற்றம் பெரியோர்களாய் இருப்பவர்கள் எதை ஆதரிக்கிருர்களோ அதையேதான் சாமான்ய ஜனங்களும் அனுசரிப்பதும், உலகில் உள்ள சகல பதார்த்தங்களும் பசுக்கள் என்னும் இவைகள் மூன்று வகுப்பாரான (பிரும்ம க்ஷத்ரிய வைச்ய) எல்லோராலும் அலங்கரிக்கபெற்று அக்னிஹோத்ரங் களாக ஆயின. அவைகளாலேயே உலகமானது தரிக்கப்படு கின்றது. கிராம்ய பசுக்களும் அரண்யத்தில் உண்டானவை களும் மரங்கள் புற்கள் பழங்கள் ஒஷதிகள் ஷ்டி காரியங்களுக்கு ஹவிஸ்ஸாக இருக்கின்றன. மேலும் ரஸங்கள் மணிகள் ஸுவர்ணங்கள் எல்லாம் இவைகளுக்காகவே படைக்கப்பட்டு இருக்கின்றன. தசரதர் யாகத்தில் उरगाः पक्षिणश्चैव என்று பாம்பின் வகைகளும், பக்ஷி விசேஷங்களும் पशूनां त्रिशतं तत्र यूपेषु नियतं तदा என்று யூபத்தில் 300 பசுக்கள் கட்டப்பட்டு இருந்த தாக வர்ணிக்கப்படுகின்றன. அதிகம் சொல்வானேன்.

यच्चैतस्यां पृथिव्यां वै किंचिदस्ति चराचरम् ।
तत् सर्वमग्निहोत्रस्य कृते सृष्टं स्वयं भुवा ॥

பிரும்மாவானவர் ஜங்கமமோஸ்தாவரமோ சகலமும் யக்ஞத்தை உத்தேசித்துத்தான் படைத்தார். அப்படி இருக்க ஸ்வருபம் தெரிந்தவர்கள் எவ்வளவோ பேர் இருக்கிருர்கள். இருந்தும் யக்ஞம் நடக்கிறது ஏதாவது உபகாரம் செய்ய வேண்டும் என்ருல் நம்மைக் கண்டவுடனேயே பார்க்காதது

---

மான ஜனகன் யாகம் செய்யும்போதும் தானம் செய்யும்போதும் ஹோமம் பூமியை பாதுகாக்கும்போதும் பரமாத்ம மயமான நிலைமை யுடன் இருந்தான். ஒரு சமயம் பாடம் நடக்கும்போது மிதிலா பட்டணம் எரிக்கப்படுவதை கண்டும் ஜனகராஜன் சலிக்கவில்லை கூட இருந்த ஸஹபாடிகள் (முனிவர்கள் கூடத்தான்) அந்தோ பட்டணம் எரிகிறது. என் ஆச்ரமத்தில் உள்ள தண்ட, கமண்டலு, சிக்கியம் இதுகளுக்கு நாசம் ஏற்பட்டுவிடுமே; என்று ஓட்டம் பிடித்

போல் பேப்பர் பார்க்கிற வியாஜத்தில் முகத்தை மறைத்துக் கொள்கிறார்கள். ஆசார்யாள் (காமகோடி) அடிக்கடி சொல்கிறார்கள். வைதிகர்களுக்கு ஏதேஷ்டமாகக் கொடுங்கள். ஆதரவு இல்லாததால் கீழ் ஸந்ததிகள் வேறு வழியில் செல்ல நேர்ந்து விடுகிறது. உத்தம பிராம்மணர்களை அழைத்து ஆதரித்து பூஸ்திதியை மனமாற உதவுங்கள். இல்லாவிடில் கண்டிப்பாக அபாத்ர விநியோகமாகிவிடும். அவாள் தீர்க்கதர்சி நமக்கும் ஸ்தேனன் என்ற தோஷமும் விலகும் உதாரணமாக ஒளபாஸநத்தை எடுத்துக்கொள்வோம். யாவஜ்ஜீவம் காலை மாலை இருவேளைகளிலேயும் எவ்வளவு அட்சதை அல்லது ஹோமத்ரவ்யம் அக்நிக்கும் இந்திராதி தேவதைகளுக்கும் செலவிடப்படுகிறதோ அதேபோல் ஒளபாஸநம் செய்யாதவர்கள் இரண்டு பங்கு திரவியத்தை கணக்குப்பண்ணி மறுபடி ஒளபாஸநம் ஆரம்பிக்கிற சமயம் உத்தம பிராம்மணர்களுக்கு கொடுத்துவிட்டுத்தான் ஆரம்பிக்க வேண்டும் என்ற நியதியைக் கொண்டே தெரியவில்லையா, அந்த ஹோமதிரவியமோ அக்நியை சேர்ந்தது. அதை உபயோகிப்பவன் ஸ்தேனன் (திருடன்) என்று சொல்வதில் என்ன பயம் யஜுங்களுக்கு இரு கைகளாலேயும் வாரிக் கொடுக்கவேண்டும் எண்ணக்கூடாது. இதுபற்றி பழமொழி சொல்வது உண்டு. மிக வறியன் தர்மம் கேட்டான் தானம் சிறந்தது என யோகியை நெருங்கினான். கையில் ஏதும் இல்லை என, யோகியானவர் சற்று யோஜித்து உனக்கு பாக்யம் இருக்கு உன் கையில் உள்ள புடலவிதையை பயிர் செய்து தானம் செய்க எனவும், அப்படியே செய்தான். போதும் போதும் என்னும்படி. திடீரென காலகதி அடைந்தான். உடன் ராஜகுலத்தில் உதித்தான், ஞாபகம் இவனை விட்டு அகலவில்லை, ஏன்?

येमृताः सहसा मर्त्याः जायन्ते सहसा पुनः ।
तेषां पौराणिको बोधः कंचित् कालं हि तिष्ठति ॥
तेषां विवर्धतां संज्ञाः स्वप्नवत् सः प्रणश्यति ।

என்றபடி எவர்கள் திடீரென மரித்து உடனேயே ஜனிக்கிறார்களோ அவர்களுக்கு பூர்வஜன்ம ஞாபகம் இருக்கும் அவர்கள்

---

தார்கள். தேசத்திற்கு அதிபதியான ஜனகன், என்னுடைய தனம் அழிவில்லாதது. எனக்கு வேண்டத்தக்கது ஒன்றுமில்லை. மிதிலாபுரி எரிக்கப்படுவதால் என்னுடையது ஒன்றும் எரிக்கப்படவில்லை. பற்றுதலை விடுவதுதான், தியாகம். அந்த தியாகத்தினாலேதான், பரமாத்மாவின் பிரஸாதமானது கிடைக்கிறது.

தானத்தின்போதுகூட எதுஎந்த காலத்தில் மிகக்கிடைக்க அரிதோ அதைக் கொடுப்பதும், தனக்கு மிக உயர்வாகவும் இஷ்டமாகவும்

வளர வளர ஸ்வப்நம் போல் அந்த அறிவு நசிக்கும். அதே யோகியைக் கண்டான் ஸ்வாமின், அந்த தானத்தால் இது (ராஜ்யம்) கிடைத்தது. இதேபோல் நம் ராஜ்யம் முழுதும் இதையே பயிரிட்டு தானம்........இந்திரலோகம்... ... அப்பனே அது முடியாது. பழைய வறுமைதான் வரும். திடுக்கிட்டான் ஏதும் இல்லாத சமயம் உனக்கு சொன்ன விஷயம் தற்பொழுது பவுனும் மோகராக்களும் கிராமங்களும் வழங்கவேண்டியிருக்க,

प्रभुः प्रथमकल्पस्य योऽनुकल्पेन वर्तते ।
स नाप्नोति फलं तस्य प्रेत्यचेह च दुर्मतिः ॥

பிரபுவாய் இருப்பவன் உத்தம கல்பத்தை அவலம்பிக்க வேண்டும். அனுகல்பத்தை அனுஷ்டிப்பவன் இஹலோகத்திலும் பரத்திலும் ஒருவித பலனும் அடைகிறது இல்லை. அதோடு போச்சா. துர்மதி என பட்டம் வேறு. எதற்காக திரவியங்கள் ஏற்பட்டதோ அதில் செலவிட்டால்தான் வரவு வைத்துக்கொள்வான். கிருஹஸ்தனுக்கு ஆடல் பாடல் கூத்து இவற்றின் விஷயத்தில் தர்ம சாஸ்திரங்கள் கொஞ்சம் தளர்த்தியே பேசியிருக்கிறது. ஆனல் அதிலேயே அமிழ்ந்து போகக்கூடாது. ஸந்யாஸி, பிரும்மசாரி இவர்களுக்கு லவலேசமும் கிடையாது. மஹரிஷிகள் கலியில் மனுஷ்யர்களுக்கு புத்தி, சக்தி, ஆயுஸ் இதுகள் குறைவாய் இருப்பதை அனுசரித்து எந்த அளவு தர்மத்தை தளர்த்தினல் சௌகரியமோ அந்த அளவு குறைத்தே பேசியிருக்கிருர்கள். கலியினுடைய சீறலால் ஜங்கமஸ்தாவரங்களுக்குகூட வீர்யம் போய்விடுகிறதாம்.

उत्सीदन्ति स्वधर्मश्च तत्राधर्मेण पीडिताः ।
गवां भूमेश्च येचापां ओषधीनां च येरसाः ॥

அதர்மத்தினல் பீடிக்கப்பட்டு பசு பூமி ஜலம் ஓஷதிகளுக்கும் ரஸம் கெட்டு விடுகின்றது. யாவஜ்ஜீவம் அக்னிஹோத்ரம் செய்யவேண்டும் அல்லது 30 வருஷங்களாவது என்று சிலரும் கிருஷ்ணகேசியாய் இருக்கும்போதாவது (நரை ஏற்படுவதற்கு முன்பு) ஆதானம் ஆரம்பிக்க வேண்டும் வேறு சிலர் 12 நாட்களாவது (காலை மாலை 24 வேளை) முக்கிய பக்ஷம் விவாஹம் ஆன 7 வது நாளிலிருந்தே அந்த விவாஹ அக்னியையே

---

எது உளதோ அதைக்கொடுப்பதுதான் ச்ரேஷ்டம். பூமிதானத்தின் உயர்வைப்பற்றியும், கோகர்ணத்தின் அளவை பற்றியும். கிழக்கு முதலான நான்கு திக்குகளிலும் 30 கோல் கொண்டது என்றும், அல்லது 100 பசுக்கள் தன் கன்றுகளோடுகூடப் படுக்கும் இடம் என்பது. இந்த குறைந்த பக்ஷ அளவான பூமியைக்கொடுப்பவனுக்கு, யமகிங்கரர்களும், தண்டனைகளும், கும்பீ பாகங்களும் கோரமான வருண பாகங்களும் பூமிதானம் செய்தவனை அணுகமாட்டா.

ச்ரௌதத்திற்காகவும், ஔபாஸனத்திற்கு எனவும் இரண்டாகப் பிரித்து நடத்தவேண்டியது. அதாவது அர்த்தாதானம் (முன் யுகங்களில் பூர்ணுதானமே ச்ராத்திகள் வந்தால் தக்ஷிணுக்கி யிலேதான். இது கலியில் வேண்டாம் எனத் தாதிகள் தடுத்து இருக்கிருர்கள். அவர்களும் ஸாம தான பேத தண்டம் என்ற வகையில் பேசியிருப்பதைக் கவனிக்க ஆஹிதாக்நி ஆகாமல் மிருதத்தை அடையாதே (அவனுக்கு புனரா விருத்தி இல்லை என்பதை ஒட்டி) ஒரு சமயம் மஹரிஷிகள் மார்க்கத்தில் சிரம மடைய பகவானை ஆராதிக்கவும் ஷாக்நி விருத்தி செய்து கொள்ளவும் (பசியை போக்கிக்கொள்ள) தடாகத்தில் இறங்கி தாமரை கிழங்குகளை தோண்டி எடுத்து கரையில் தனித்தனியாக இடங்களில் வைத்துவிட்டு அவரவர்கள் ஸ்நாநங்களை முடித்துக் கொண்டு கரையில் வந்து பார்க்க காணுமையால் ஒருவர்மேல் ஒருவர் சந்தேகப்பட்டு சபதம் செய்ய முயன்றுர்கள். அதில் ஒரு மஹரிஷி என்னுடையதான தாமரைக் கிழங்குகளை எவன் எடுத்தானே அவன் अनाहिताग्निः म्रियतां यज्ञेषिध्नं करोंतु च ஆஹிதாக்நி ஆகாமலே சாகட்டும் என்பது. பாருங்கள் அது தண்டனை ரீதியில் அமைந்து இருக்கிறது. அடியேனுக்குத் தெரிந்தவரை முன்பெல்லாம் யாகங்கள் நிறைய நடந்த காலம். கோபம் வந்தால் இஷ்டா பூர்த்தத்தின்மேல் ஆணையிட்டுச் சொல்கிறேன் என்று அந்த ரீதியாலேயே சண்டைகளும் சச்சரவு களும் பேச்சுக்களும். இதிலிருந்து அக்நிஹோத்ரமானது யாக மானது எவ்வளவு இன்றியமையாதவை. இவ்வளவு பெருமை இருக்க நம்மவர்களில் மிக பெரியோர்களாய் இருப்பவர்கள் வேண்டாம் என்று எதை ஆதாரமாகக் கொண்டு அல்லது மேலும் மேலும் பசுபந்தம் பண்ணவேண்டும் அது கொடுமை என்று. (அடியேன் காதில் பட்டதினுல்) அது கொடுமை என்றே நினைக்கப்படாதது. ஸ்வதர்மமல்லவா.

वेदोक्तं ये न कुर्वन्ति हिंसाबुद्धया क्रतून् द्विजाः ।
सद्यः शूद्रत्व मायान्ति प्रेत्य चण्डालतामपि ॥

எவன் ஒருவன் வேதத்தில் சொல்லப்பட்ட விஷயங்களை ஹிம்சை என்ற புத்தியால் செய்யவில்லையோ உடனே அவன்

---

ரௌரவம், வைதரணி, கோரவாதனைகளும் அணுகமாட்டா, சித்ர குப்தன், கலி, காலன், அந்தகன், ம்ருத்யு, ஸாக்ஷாத் யமனும், ருத்ரன், பிரும்மா, ரிஷிக்கூட்டங்களும், இந்திரன் முதலான தேவக்கூட்டங் களும் நானும் பீரிதி அடைந்தவராக ஆகிறேம். அது பரலோகத்தில் நன்மையைப் பெருக்கும் நிதி. ஜலத்தால் நனைக்கப்பட்ட விதைகள் முளைப்பதுபோல் தினந்தோறும் அவனுடைய இஷ்டங்கள் முளைக்கிறது. (நிறைவேறுகிறது)

நாலாவது வர்ணமாக ஆகி பிறகு சண்டாளனுகப் பிறக்கிருன். அவன் பண்ணுகிற பூஜை பாராயணம் ஜபம் ஒன்றும் பிரயோ ஜனப்படாது. எவர்கள் தேவதைகளுக்கு ஏற்பட்ட பிரதான ஹவிஸ்ஸை நிந்திக்கிருர்களோ அவர்களுக்கு பலனே சொல்வதை கேட்டாலே மனம் நடுங்குகிறது.

बुद्ध्यनावन्ति ये विप्राः निन्दन्ति च पशोर्वधं
ते यान्ति नरकं घोरं रौरवं तमसावृतम् ॥

ஒரே இருட்டால் சூழ்ந்ததும், மஹாகோரமாயும், பார்த்த மாத்திரத்திலேயே மிக அபஸ்வரமாக அலறும்படியான ருரு என்ற பிராணியிஞலே பீடிக்கப்படுகிற நரகத்திற்கு செல்கிருர்கள். அல்லது மித்யை (பொய்) என்றுதான் நினைக்க முடியுமா என்னுடைய ஆக்ஞையால் சித்தித்தது இந்த நான்கும் என்கிருர்

भारतं मानवोधर्मः वेदाः सांगाः चिकित्सितम् ।
आज्ञा सिद्धानि चत्वारि न हन्तव्यानि हेतुभिः ॥

பாரதம் மனுதர்மம், அங்கங்களோடுகூடின வேதம், ஆயுர்வேதம், வபாஹோமத்தின் சமயம் அத்வர்யுவபயை வபாச்ரபணியில் வைத்து (முள்ளுச்செடி) பிரதிப்ரஸ்தாவிடம் கொடுக்கிருன். அவன் அதை ஆவஹநீயத்தில் எங்கும் சூடுபடும்படி நெய் நிறைய சேர்த்து பாகம் பண்ணும்போது மைத்ராவருணன் அக்நியை பார்த்து வபையிலிருந்து சொட்டும் நெய் துளிகளை ஏற்றுக்கொள்ளும்படி பிரார்த்திக்கிருன். அஷ்-3, பிரச்-6, அனுவாகம் 7. அதேபோல் நாமும் ஸ்வல்ப நெய்யையோ அல்லது இதர திரவ்யங்களையோ எடுத்துக்கொண்டு போய் பிரார்த்திக்க வேண்டியிருக்க திண்ணையில் உட்கார்ந்தபடிக்கே (இதெல்லாம் காலத்திற்கு ஒவ்வாத சமாசாரம் பகவானை தியானம் பண்ணுவதே போதும் என்று. நமக்கோ மனதானது பழகின விஷயத்தில்கூட நிலேயாய் இருப்பது இல்லே. நான் ஸ்வதந்திரன் என்ற எண்ணங்கள் கணக்கில்லாத ஜன்மங்களில் பழக்கப்பட்டு மிக வலிமை உள்ளதாக. ஏன் நாக்கும் தழும்பும் ஏற்பட்டு விட்டது என்றே சொல்லலாம். அவைகளுக்கு விரோதமாக இரண்டு நிமிஷமாவது தியானம் பண்ண முடியுமா. நமக்கு

---

சிஷ்டாசாரம்

சிஷ்டாசாரம் என்பது பரம்பரையாக பெரியோர்களால் அனுஷ்டிக் கப்பட்டு வருவது. அது ஐந்து விதம்.

यज्ञो दानं तपो वेदाः सत्यं च द्विजसत्तम ।
पञ्चैतानि पवित्राणि शिष्टाचारेषु नित्यदा ॥

உ-6

கர்மங்கள் பண்ணியேதான் பழக்கம். கீதையில் கர்மங்கள் இல்லாமல் வெறும் தியானம் ப்ரயோஜனப்படாது என்று தெளிவாக உள. இதை விடு அதை பிடி என்று சொல்வதற்கு யாருக்கு பாத்யம் அல்லது இவர்கள் தர்ம சாஸ்த்ர ப்ரவர்த்தகர்களா ?) சுலபமாக பாபத்தை மூட்டைக் கட்டிக் கொள்கிறுர்களே. இவர்களோடு கூட வரப்போவது (ஸ்வயம் கில்பிஷமாதாய) என்று பெரிய பாபச்சுமைதான். தூக்கிவிடுப வர்கள்கூட கிடையாது. முன் இருந்த துர்மந்திரிகள் கூட வருவார்களா? எதையும் ஒத்துக்கொள்ள வேண்டாம் பிற்பட்டு உன் மணிபர்ஸ் காலிதான் என்று சொன்ன யோஜனையாளர்கள் கூட வரப்போவதும் இல்லே. தன்னந்தனியாகவும் கண்ணும் கண்ணீருமாகத்தான் செல்லவேண்டும். முன் சொல்லிய (17 பக்கத்தில்) यथैव आत्मकृतं विधुः என்ற ஒரு ச்லோகமே போதும் மனுஷ்யர்கள் திருந்திவர. அடியேன் நினைப்பது உத்தமமான பதார்த்தத்தை எல்லோருடனும் பகிர்ந்து உண்ண வேண்டும் என்பதைபோல் நான் சிரமப்பட்டு சம்பாதித்த பிரயோகத்தை எல்லோரும் அனுஷ்டித்து க்ஷேமத்தை அடைய வேண்டும் என்பதுதான். அப்படி இருக்க படித்தவர்கள் பேசலாமா ? வேண்டாம் மூலேக்கு ஒருவராக தன் அபிப்பிரா யத்தைச் சொல்லாமல் வித்வான்களே கூட்டி நமக்கு அக்நி ஹோத்ராதி கிருதுக்கள் வேண்டியது இல்லே என்றுவது சொல்லட்டும், நான் சிரமப்பட்டு ருத்விக்களே சேர்க்கும்போது யாகத்தில் அஸம்மதாளாய் இருப்பவர்களும் பஸ், ரயில் சார்ஜ் செய்துகொண்டு கலேப்பதும், ரணத்தை கீறி ஆற்றுவதுதான் மேன்மை. இதை தடுப்பது மஹாபாபம், இவன் எங்கு ஓடினுலும் எங்கு மறைந்தாலும் விடாது. எவ்வளவு ஜன்மா எடுத்தாலும் தொடரும். இவாளுடைய பாகம் (ஸ்வதந்த்ரம்) எடுத்துப்போடும் சமயம் கொஞ்சம் சிதறிவிட்டால் அடங்காக் கோபம் வந்து ஈ ஓ வரை எட்டிவிடுகிறதே. எவ்வளவு தேவதைகளுக்கு இந்த யஞ்யத்தில் அவிர்பாகம் கொடுக்கப் படுகின்றது. தடுக்கலாமா,

वृक्षाः यूपत्वं इच्छन्ति पशुत्वं पशवस्तथा ।
तृणानि इच्छन्ति बर्हिष्ट्वं ओषध्यश्च हविष्मतां त्वं सोमत्वं च लताः सर्वे ॥

---

யக்ஞம் - அக்நி ஹோத்ராதி கர்மாக்கள்; தானம் - தன் சக்திக்கு தகுந்தபடியோ அல்லது உயர்வாகவோ வீட்டிற்கு வந்தவர்களே முதலில் ஸ்வாகதம் (வரவேற்பது) ஆதரவோடு எதிர்கொண்டால் அக்நிகளின் பிரிவு 48ம் சந்தோஷிக்கிறதாம். பிறகு ஆஸனம், உட்கார பலகை, தர்பாஸநம், கொடுப்பதால் தேவேந்திரனும், கைகால்

அவரைக்கொடி, ஓஞன்கொடி இன்னும் பல எல்லாம் நினைக்கிறதாம் நான் ஸோமலதையாக பிறந்து யாகத்தில் சம்பந்தப்பட்டு உத்தமகதி கிடைக்காதா. அதேபோல் மரங்களும் ஓஷதிகளும் புல்கள் தர்ப்பங்களாக முளைக்கவேண்டுமென்றும், யூபஸ்தம்பங்களாகவும், மேலும் பிராம்மணனுனவன் புல் பூண்டு முதல் தேவதை வரை மித்ரன் என பூர்வம் சொல்லியுள்ளேன் அதாவது (சிநேகிதன்) பசுவை ஆலம்பனம் பண்ணுவது ஹிம்சை என்று சாமான்ய ஜனங்கள் சொல்வது பிசகு. ஹிம்சை என்ற சொல்லுக்கு முடிவில் தொந்தரவையே கொடுக்கும் வியாபாரம் என்பது பொருள். இங்கு பிராணனை தியாகம் செய்யும்பொழுது முதலில் கொஞ்சம் சிரமம் இருந்த போதிலும் அந்த பசுவிற்கு இளப்பமான ஆட்டுப்பிறப்பு போய் உயர்ந்த தேவப்பிறப்பு வருகிறது. नवा उवे तन्म्रियसे सविता ददातु இது பசுவைப் பார்த்து யஜமானன் சொல்லும் மந்திரம். நீ சாஸ்த்ர நோக்கால் சொல்லப்படுவது இல்லை. உலக நோக்கால் தான். ஸூர்யன் உன்னை சுகமான வழியாய் துக்கம் கலப்பில்லாத சுகமுள்ள இடத்திற்கு அழைத்துக்கொண்டு போகிருன். (அஷ். 3, பிர 7, பஞ்சாதி 92) அந்த பசுவானது பொன்னுடம்பை எடுத்துக்கொண்டு மேலாகிய ஸ்வர்க்கலோகத்தை அடைகிறது என்றும், பசுவை ஆலம்பனம் பண்ணும்போது சிரமம் ஏற்படாதிருக்க (Chlohoform) சிகிச்சை போலும்.

घ्नन्तिवा एतत्पशुं यत्संज्ञपयन्ति प्राणापानौ खलुना एतौ पशूनां यत्पृषदाज्यं यत्पृष्दाज्येनान् याजान् यजति प्राणापानावेव पशुषु दधाति।

முன்னும் பின்னும் சில ஹோமங்களும், நெய் கலந்த தயிர் (பிருஷதாஜ்யம் என்பது) பிராண அபான வடிவமே ஆதலின் இவன் ஸர்வ பூதங்களுக்கும் மித்ரன் ஆனதாலும் மேற்சொன்ன பிருஷதாஜ்யத்தால் ஹோமம் செய்யில் பிராண அபானங்களை நிலைக்க வைத்ததாகும். 6-வது காண்டம் 3-வது பிர. கடைசி அனுவாகம் ஆகரக்ஷணமே இது. முடிவில் மிகுந்த சுகத்தைக் கொடுப்பதால் முதலில் செய்த ஹிம்சை தொந்தரவு அன்று. சிரங்கு வந்தவனுக்கு வைத்தியன் கீறி ஆற்றுகிருன். கீறும் போது வலி உண்டாகிறது. பின்னுலே வருகிற சுகத்தைப் பார்த்து வைத்தியன் வேலையை ஹிம்சை என்று சொல்வது

அலம்ப தீர்த்தம் கொடுப்பதால் இவனுடைய பிதிர்களும் (ஸாதுக்கள் கால் அலம்பி முற்றமானது சேருகவேண்டும்) அவ்வளவு உயர்வு பிறபட்டு தீர்த்தமோ பழங்களோ அன்னமோ சக்திக்குத் தக்கபடி கொடுப்பதால் பிரஜாபதியும் சந்தோஷிக்கின்ருர்கள். (உத்தமபாத்ரம் கிடைத்தால் ஸகலத்தையும் கொடுத்து ஏழையாவதேமேல்.

|| श्रीः ||

# வாஜபேயம்

இது மிக உயர்வானதும் பெருமை வாய்ந்ததுமான க்ரது சரத்ருதுவில் (அற்பிசி & கார்த்தி) நடத்தவேண்டியது.

## விசேஷ அம்சங்களாவன

ஆஜிதாவநம். ஸ்வர்காரோஹணம். ஸாம்ராஜ்ய பட்டாபி ஷேகம் இன்னும்.........அத்வர்யு முழு பலத்துடன் பாணத்தை எய்தல் வேண்டும். எங்குபோய் விழுமோ அதேபோல் 17 பங்கு கணக்குப்பண்ணி முடிவில் ஒரு கொம்பை நடவேண்டியது. அதற்கு ஆஜி என்று பெயர். யக்யவாடத்தில் இருந்து யஜமானன் மூன்று குதிரைகள் பூட்டின ரதத்துடன் வேகமாக ஆஜியிடம் செல்கிறதை ஆஜிதாவனம் என்பது. முன்னம் தேவர்களுக் குள்ளே, யார் வாஜபேயம் செய்வது என்று. ஆஜிதாவனம் செய்து யார் முன்னதாக ஆஜியிடம் செல்கிறார்களோ என்ற முடிவிற்கு பிருஹஸ்பதி ஜயித்தார். அதே க்ரமத்தில் தற்பொழுதும் ஆஜிதாவனம் நடந்து வருகிறது. தீக்ஷை 13 நாள் உபஸத் 3 நாள், ஸுத்யாஹஸ் ஒரு நாள், ஆக 17 நாள். யூபம் 17 அரத்நிஉயரம். பிரஜாபதி தேவதையின் பசுக்கள் 17. எல்லாம் 17 என்ற சங்கியை வரவேண்டும். ஸோமக்ரஹம் 17. ஸுராக்ரஹம் 17. ஸ்தோத்திரங்கள் 17. ஸ்தோமம் 17. ஸுராக்ரஹத்தால் யஜமானனுக்கு பாபநிவர்த்தி. அஷ்டகம் 1. பிர 3. பஞ் 10+21. ஸோமக்ரஹத்தால் தேஜஸ் அபிவிருத்தி யும், கலியில் ஸுராக்ரஹம் கூடாது என்று சாஸ்திரம் இருப்ப தால் ஸுரைக்குப் பதில் க்ஷீரம் (பால்) (தாம்ர பாத்திரத்தில் பாலை விடுவது ஸுரைக்கு ஸமம்.) இதை அசைப்பதுதான் ஹோமம் செய்வது இல்லை.

ஸ்வர்க்காரோஹணம் (ஸ்ரீவைகுண்டமே) இதற்கு ஸோபான மும் 17 தான் (படிகள்) இவ்வளவு சுலபமா என சந்தேஹம் வருவதும் ஸஹஜம். பகவான் ஸ்ரீய: பதி, க்ருபாஸமுத்ரமல்லவா. ஆக்ஞ்யா, கைங்கரியத்தை சிரத்தா பக்தியுடன் செய்பவ னிடத்தில் கிருபை, சுரப்பது என்பது இயல்புதானே அவ்வளவு எளிதாக ஆக்குகிறான். (வாமனனுகி, த்ரிவிக்ரமனுகவும்,) அவ்வளவு பரிவு யஜமானன் தார்ப்யம் என்ற நெய்யில் தோய்த்த வஸ்த்ர மும், தர்ப்பையால் ஆன ஆடையை பத்னியும், யஜமானன், நான் ஸவிதாவினுல் ஏவப்பட்டும் பிருஹஸ்பதியின் அனுக்ரஹத் தாலும் மிகவும் உயர்ந்ததான ஸ்வர்க்கத்தில் ஏறுகிறேன் என்ற பொருள் உள்ள மந்த்ரத்தை சொல்கிறான். அஷ் 3, பி 3, ப 3. மேலும் பத்னியைப் பார்த்தும் ஜாயே, வா, ஸ்வர்க்கம் ஏறுவோம் என்பதாக,

दार्भ्यं यजमानं परिधापयति.....जाय्याहि सुवोरोहावेत्याह

மூன்ருவது வியாபாரம் — ஸாம்ராஜ்ய பட்டாபிஷேகம், யூபத்திற்கு கீழ்புரம் நாற்காலியில் ஏறி வலது காலை சதமானம் 300 குன்றுமணி அளவு எடையுள்ள தங்க தகட்டின்மேல் வைத்தும், பஸ்தாஜினம் (பஸ்தி என்பது அஜத்தின் ஒரு வகை.) என்றதின் மேல் இடது காலையும்—காட்டில் விளைந்த தானியம் 7 வகை, கிராமத்தில் விளைந்த 7 வகை தானியங்களையும் கஞ்சியாக. மேலும் ஓஷதிரஸங்களும் (யவாகூ)

सप्तान्नहोमान् जुहोति.....आमुखादवपन्वस्त्रावयति ।

முகத்திலிருந்து பெருகவிடவேண்டியது. அபிஷேகத்தின் பிரயோஜனம்—யஜமானனுக்கு ஸாம்ராஜயம் கிடைப்பது அதாவது எல்லோருக்கும் மேலாக (ஏற்பட்ட விரதங்கள்) இதரர்களுடன் ஓரே ஆஸனத்தில் உட்காருவதும், பின் செல்வதும், ப்ரத்யுத்தானமும் கூடாது.

இது பற்றி கர்ண பரம்பரையாக 7 வயது சிறுவன் தாயோ விதந்து. ஆஹாரத்திற்கோ வழியில்லை. அவ்வூர் பாடசாலையில் பையனை சேர்ப்போமென்ருல் அனுபநீதனை சேர்ப்பது இல்லை எனவும் கவலையில் ஆழ்ந்து விட்டாள். திடீரென ஒரு யோஜனை. கையில் 5 நயா பைசாதான். திரு. செட்டியார் கடை, வாங்கிஞள் பூணலை—அடுத்த ஊர் சந்தடி இல்லாத புளியந்தோப்பு. மாட்டிஞள் யஜோபவீதத்தை. பிரச்சாரம் திருப்பதி வெங்கடாஜலபதி ஸன்னிதானம்—மங்களகரமாக, சுபமாக, உபநயனம் ஆனதாக —வித்யார்த்தியாக சேர்த்ததுதான், சிறிது காலத்திற்குள்ளே, இவனுடைய மேதை சுறுசுறுப்பு விநயம் ஸாமர்த்யம் இவனை மேம்படுத்தி விட்டது. இவனுடைய தோற்றத்தையும் பார்த்து கோடீச்வரர் தனது பெண்ணை விவாஹமும், உசித காலத்தில் ஸகல கர்மாக்களையும்...........வாஜபேய யாகத்தால் பகவானை ஆராதிக்க எண்ணம் கொண்டான். அவ்வளவுதான் அன்னமலை, நெய்மடு, பக்ஷ்யங்கள் சிறுகுன்ருக வந்து குவிந்து விட்டது. மஹாவித்வான்கள் ருத்விக்குகளாக ...... இப்படியாக அவபிருதமும், தேசத்திற்கு அதிபதியான ராஜா யக்யவாடத்தில் இருந்து (யஷ்டாவை அக்நிஹோத்திரத்தோடும்) ச்வேதச்சத்ரம் பிடிக்க அஷ்டாதச வாத்யங்கள் முழங்க பிருதுகளோடும் எங்கும் ஜயகோஷம். பரிஜனங்கள், வித்வான்கள், சம்பந்திகள் வீட்டிற்குக் கொண்டுவிடவும். தாயாரை நமஸ்கரித்தான். தாயாருக்கு சந்தோஷமும் துக்கமும் கலந்து, கலந்து வாய் குளர, விம்மிக் கொண்டு, அப்பா குழந்தை, உனக்கு ராஜா வந்து குடை பிடிக்கவும், இவ்வளவு புகழ் வரும் என்று தெரிந்தால் (வாக்கு எழலை) 5 நயா திரு செட்டியார் கடை......புளியம்தோப்பு...... வாஸ்தவமாக சாஸ்திரிகளை கூப்பிட்டு...........என்ன............ என்ன.........திரு செட்டியா ரா........புளியம்தோப்பா......... ஸகலருக்கும் ஒரே பிரமிப்பும்...........திகைப்பும்.

சுபம் உ. கி. வ. யஜ்வா.

இல்லை. அதோடு போச்சா ஊசியை எடுத்து குத்தினவனுக்கு கத்தியை எடுத்து அறுத்தவனுக்கு ஸன்மானமும் செய்கிறோம். எல்லாம் மனம்தான் காரணம். இவனுக்கு அவன்மேல் விரோதம் இல்லை. க்ஷேமம் அடையவேண்டும் என்ற நோக்கம் தான் எண்ணம் சரியாய் இருந்தால் காரியம் எப்படி இருந்தாலும் பரவாயில்லை மனைவி வேறுவிதமான எண்ணத்தால் ஆலிங்கனம் செய்துகொள்ளப்படுகிறாள். தன் பெண்ணையும் ஆலிங்கனம் செய்துகொள்ளப்படுகிறது. यतेश्च कामुकानां च योषिद्रूपे यथामतिः ஸன்யாஸிகளுக்கும் காமவெறியனுக்கும் ஸ்திரீகள் விஷயத்தில் வெவ்வேறு எண்ணம். ஹநுமான் ஸீதாப்பிராட்டியை தேட வேண்டிவந்தது ஸ்திரீகளோ அலங்கோலமாக படுத்து உறங்குகிற இடம். அகப்படவில்லை. பிறகு தன்னையே இதனால் தனக்கு தோஷம் ஏற்பட்டு இருக்குமோ என சங்கைப்படுகிறார்.

मनो हि हेतुः सर्वेषामिन्द्रियाणां प्रवर्तते ।
शुभाशुभास्ववस्थासु तच्चमेसुव्यवस्थितम् ॥

என்னுடைய மனஸ்ஸோ சரியான நிலைமையில் இருக்கும்போது தோஷத்தோடு ஏன் சம்பந்தப்படும் என்று தன்னையே தேற்றிக் கொள்கிறார். எந்த காரணத்தைக்கொண்டு பிரத்யக்ஷ பசு வேண்டியது இல்லை என்று சொல்கிறார்கள். அல்லது இடா பக்ஷண விஷயமாக அருவருப்பால் சொல்கிறார்களா (வேண்டா மென்று) நம் ஆசார்யன் ஆகாரநியமம் என்று ஒரு காண்டம் சொல்லியுள்ளார், யக்ஞத்தில் அவசிஷ்டமான ஹவிஸ் சாப்பிடத் தகுந்தது. (வைகாநஸ கிருஹ்ய ஸூத்ரம் பிர. 9–15 கண்டம்) यज्ञशिष्टं मांसं भक्षणीयम् பிதுருக்களை உத்தேசித்தும் தேவதைகளை உத்தேசித்தும் ப்ரோக்ஷிக்கப்பட்டது ஹவிஸ் என்று பெயர். இது வேத விதி.

पितृदैवतयज्ञेषु प्रोक्षितं हविरुच्यते ।
विधिना वेददृष्टेन तद्भुक्त्वेह न दुष्यति ॥
यज्ञार्थं पशवस्सृष्टाः इत्यपि श्रूयते श्रुतिः ।

அந்த சேஷத்தை சாப்பிட்டால் தோஷமாகாது. யக்ஞத்தை உத்தேசித்துத்தான் பசுக்கள் ஸ்ருஷ்டிக்கப்பட்டன என்று

---

स्वाचतेन अग्नयः आसनेन शतक्रतुः ।
पितरः पादाशौचेनअन्नाद्येन प्रजापतिः ॥

தபः காயக்லேசம் ஏகாதசி முதலிய உபவாஸம். वेदाः தன்னுடைய தான, வேதாவிருத்தி. ஸத்யம், உண்மை உரைத்தல்.

வேதம்மூலம் நமக்கு கேழ்க்கப்படுகிறது. பெரும்பாலும் சிலர் வெங்காயம், உள்ளிப்பூண்டு, முருங்கை சாப்பிடுவதில் அருவருப்பு இல்லை. நம் ஸூத்ரக்காரர் விதித்தது, வேதம் விதித்தது, இதில்தானு மேற்சொன்னவைகளை சாப்பிட்டால் பிராம்மண்யமே நிலைக்க வழியில்லை, ப்ரப்ரும்மத்தினிடமும் சேரவொட்டாது ராஜஸதாமஸமான ஆகாரங்கள்

आहारान् वर्जयेन्नित्यं राजसांस्तामसानपि ।
ते ब्रह्म पुनरायान्ति न मोहादचला इव ॥

அவிவேகத்திலிருந்து விலக செய்யாதவைகள் மேலும் ஸ்திரப் படுத்தும். பெரும்பாலும் ஜனங்களுக்கு கூடாது என்ற விஷயத்தில் ஜாஸ்தியான அபிநிவேசம் ஸதிபதிகள், பதியானவர் தன் பத்தினியின் குறிப்பு அறிந்தே எப்பொழுதும் மாற்றியே சொல்லி வருவார். ஒரு சமயம் சிராத்தம் வந்தது. பதி ஞாபக மறதியால் நாளை சிராத்தம் ஆனபடியால் வீட்டை செவ்வைப் படுத்தி பதார்த்தங்களை சுசி, ருசியாயும் ஸ்வாமிகளை தகுந்தபடி உபசரித்தும் அனுகூலையாக இருந்து நடத்திக்கொடு-என்க என்ன சொன்னீர் என்று சப்தம் போட்டாள். பர்த்தாவிற்கு ஆகா மோசம் போனேமே என்று ஒடுங்கி நாடிகள் தளர. இது கலி. எல்லோரும் அப்படி இல்லை. உத்தமமான குடும்பங்கள் ஏதேஷ்டமாக உள்ளன. மறுபடியும் எழுது கிறேன். ஜனங்களுக்கு பெரும்பாலும் கூடாது என்ற விஷயத்தில் ஜாஸ்தியான அபிநிவேசம் நன்முக கவனிக்கவும். வைத்ய சாஸ்த்ரமானது உடம்பின் வியாதியை போக்கடிக்க ஏற்பட்டது. வேதம் முதலான தர்ம சாஸ்த்ரங்கள் (ஆத்மாவின் வியாதியை) போக்கடிக்க ஏற்பட்டது. உடம்பின் வைத்திய சாஸ்திரத்தில் துளி தவறினால் நடுங்குகிறார்களே. மூன்று நாள் ஒருபுறமாக படுக்கவேண்டும் என்றால் (ததாஸ்து) तथास्तु மறு பேச்சு கிடையாது. ஆத்மாவின் வைத்திய சாஸ்திரத்தை பலவிதமாக குலைக்கிறார்களே-சித்ரவதை என்றாலும் போதாது. அப்படி இருப்பதற்கு காரணம் ஜீவாத்மாவின் கதா கதியை தெரிந்து கொள்ளாமல் இருப்பதுதான். ஆலஸ்யம், சோம்பல்,

---

सत्यं स्वर्गस्य सोपानं पारावारस्य नौरिव

என்பது கடலை கடக்க கப்பல் எப்படி அவசியமோ அப்படியேதான் ஸ்ரீ வைகுண்டத்திற்கு ஸோபானமாக (படிக்கட்டுகளாக) ஸத்யத்தை சொல்லப்படுகிறது. முன்மெல்லாம் எல்லோரும் ஸத்யவாதிகளாக இருந்ததால்தான் மிக லேசாக இருந்து எங்கு வேண்டுமானாலும் சென்றார்கள். அவர்கள் சமுத்ரத்தில் ஓடம் மிதப்பதுபோல்தான். பாபிகள் ஜலத்தில் விழுந்த ஆயுதம்போல் பூமியிலே தங்குவதும்

ஜீவஸ்வரூபம், மாீசிபடலம் 86-வது பக்கம் 501. பகவான் மாீசி: ஜீவஸ்யகா்மா.

जीवात्माऽञ्जनाभः नित्यशुद्धबुद्धबोधनिर्विकारः नित्याणुप्रमाणः सर्वगत इत्येवं भूतं देहं प्रविश्य शुभाशुभकर्माणि करोति......दैवयोगात् देहावसा स्वकर्मानुरूपं परलोकं प्राप्य तत्कर्मफलं भुङ्क्त्वा क्षीणे फले निवृत्य चाका प्रविशति। ततो वायुं प्रविशति, वायुर्भूत्वाऽग्निं प्रविशति, धूमोऽग्निर्भूत्वाऽ प्रविशति' अभ्रं भूत्वा भूमौ वर्षति। भूम्यां ओषधीन् वनस्पतीन् प्रविश ओषधीभ्योऽन्नं, अन्नात् शुक्लशोणितं भवति। ततः सर्वयोग्यां स्वविषय योनिं प्रविशति। प्रतिदिवसं वृद्ध्या परिणतो जायते च। एवं क्षेत्रस्य क्षेत्रज्ञस्य च परस्पर संबन्धात् अनन्त संसारस्थावर जङ्गमनरमृग पशुपक्षि जरायुजाण्डज स्वेदज उद्भिज्जभेदानि बहूनि भवन्ति। देहजीवयोः परस्पर-संबन्ध इति विज्ञायते।

இந்த ஜீவாத்மாவானது மை போன்ற நிறமுள்ளதாயுப் சாச்வதமாயும் சுத்தமாயும் அறியப்பட்டதாயும் ஞானமாகவுப் மாறுதல் இல்லாமலும் அணுப்ரமானமுள்ளதாயும் (அணு என்றால் ஜன்னல் சாரளம் வழியாய் சூரிய கிரணங்களில் மிதந்து கொண்டு இருக்கும் தூசு ஒன்றுக்குப் பெயர். அந்த அணுவை 100 பங்காக்கிறல் 1 பங்குக்கு பரமாணு என்பது. அநேக பரமாணுக்கள் சேர்ந்தது பிரும்மாண்டம். ஸகலத்தையும் அடைந்ததான இந்த ஜீவன் தேகத்தினுள் புகுந்து சுபத்தையோ அசுபத்தையோ செய்கிறது. பிறகு தேஹாவஸாநத்தில் இந்த பாஞ்சபௌதிகமான சரீரத்தை விட்டு எந்த எந்த கா்மாவை செய்ததோ அதற்கு தகுந்ததான உலகங்களை அடைந்து அனுபவித்து அந்த லோகத்தில் இருந்து இங்கு திரும்பி கா்ம பூமியில் பிறப்பு ஏற்பட ஆகாசத்தை அடைகிறது. எவ்வளவு காலம் ஆகாசத்தை அடைந்து பிறகு காற்றில் ப்ரவேசிக்கிறது என்றால் ஸா்வேச்வரனுக்குத்தான் தெரியும். காற்றோடு கலந்து அந்த காற்றும் நம் பாரத தேசம் தவிர வேறு எங்கேயாவது போய் கிரமப்படி ஜீவன் வேறு தேஹத்தை அடைந்தால் பிரயோஜனப்படாது. கா்மாவிற்கு உரிய இடம் நம் பாரத தேசமே. காற்றாக மாறி பிறபட்டு அக்நியை அடைகிறது.

---

प्लवन्ते धर्मलघवः लोके अंभसि यथा प्लवाः।
मज्जंति पापगुरवः शस्त्रं स्कन्नमिवोदके ॥

தா்மருடைய ரதமானது யுத்த காலத்தில் பூமியை தொடாமல் நான்கு அங்குலம் மேலே ஆகாச வீதியில் ஓடிக்கொண்டு இருந்தது. அச்வத்தாமா ஹதః குஞ்சரః என்ற சொல் பூமியை தொடும்படி செய்துவிட்டது.

